29th September 1958]

ஜில்லா போர்டு நிதி போதுமானதாக இல்லாத காரணத்தினாலே இந்த வேலைகள் தயக்கப்படுகின்றன. அதை சரிக்கட்டுவது பற்றி இந்த போர்டில் ஏதாவது ஆலோசிக்கப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கூட்டத்தில் ஆலோசிக்கப் படவில்லை.

*Charkas*

*592 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோவையில் டெக்ஸ்டூல் கம்பெனியார் செய்த 16 (ஸ்பிண்டில்) கதிர் உள்ள ராட்டைகள் இதுவரை அரசாங்கம் எத்தனை வாங்கியிருக்கிறது ?

(ஆ) இந்த ராட்டை ஒவ்வொன்றின் கிரயம் என்ன ?

(இ) இவற்றை எந்த கிராமத்தில் வைத்து பரிசீலனை செய்யப்படுகிறது ?

(ஈ) பரிசீலனை மூலம் இதுவரை கண்ட முடிவு என்ன ?

(உ) இந்த ராட்டை மூலம் ஒரு மணிக்கு எந்த நம்பர் உள்ள நூல் எத்தனை சிட்டம் நூற்க முடிகிறது ?

(ஊ) நூலின் பலம் பரிசீலனையில் எப்படி இருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Twenty-five spinning units have been purchased from Messrs. Textools, Limited, Coimbatore.

(*b*) The cost of each unit is Rs. 1,000 only exclusive of the cost of motor and accessories.

(*c*) The units are being worked at Pollachi and surrounding villages of Nallapattipalayam, Nagamam, Muthur and Annamalai.

(*d*) It has been found that the spinning units when worked by two persons (one adult and a boy or woman) for 8 hours can produce 5 lb. of 20s yarn (100 hanks), the quality of which compares very favourably with mill yarn. The yarn has been used on four looms installed at Pollachi and cloth so woven has proved to be popular.

(*e*) Between 10 and 13 hanks of 20s yarn could be spun in one hour.

(*f*) The yarn spun by the trainees is fairly uniform in count and tensile strength and compares very favourably with the mill yarn.

SRI A. VEDARATHNAM : இந்த முடிவுகளிலிருந்து இந்த ராட்டைகளை மேலும் விஸ்தரிப்பதற்கு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ? அப்படியானால் எந்த அடிப்படையில் ? எவ்வளவு ? எந்த இடத்தில் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நூல் நன்றாக இருக்கிறது. நூலினால் நெய்யப்பட்ட துணியும் நன்றாக இருக்கிறது. ஆனால் கைத்தறிக்காரர்கள் இதை எவ்வளவு தூரம் கையாளுகிறார்கள் என்பது இப்பொழுது பரிசீலிக்கப்படுகிறது. கைத்தறிகாரர்கள் இருக்கும் இன்னும் இரண்டு சென்டர்களில் இதைப் பரிசீலித்து கவனிப்பது என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

[29th September 1958

**Sri A. VEDARATHNAM**: இந்த நூல் இதுவரையில் கைத்தறி நெசவாளர்களுக்குக் கொடுத்து பரீட்சிக்கப்படவில்லையா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: கொடுக்கப்பட்டு பரீட்சிக்கப் பட்டிருக்கிறது. ஆனால் அறுப்புக்கோட்டை போன்ற கைத்தறிக்காரர்கள் பெருவாரியாக உள்ள இடங்களில் இது பரீட்சை செய்யப்படவில்லை.

*Glass bangles, beads and toys*

*593 *Q.*—**Sri P. G. MANICKAM**: கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1957–58-ம் ஆண்டுகளிலே கண்ணாடியில் வளையல்கள், மாலைகள், விளையாட்டுச் சாமான்கள் செய்யப் பயிற்சி அளிக்க நிறுவப்பட்டிருக்கும் தொழிற்சாலைகளில் எத்தனை பேர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்பட்டன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**:

1957—31 candidates.
1958—31 candidates are undergoing training.

**Sri P. G. MANICKAM**: மதுரையில் இதற்காக நிறுவப்பட்டிருக்கும் தொழிற்சாலையில் பயிற்சி பெற்றவர்களுக்கு எத்தனை பேர்களுக்கு ரூ. 1,200 வீதம் மான்யம் கொடுக்கப்பட்டது ? மற்றும் கூட்டுறவு சங்கங்களின் மூலம் எத்தனை பேர்களுக்குக் கடன் தொகையும், மான்யத் தொகையும் கொடுக்கப்பட்டது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: அதுபற்றி தனிக் கேள்வி கேட்கவேண்டும்.

**Sri K. B. S. MANI**: இம்மாதிரி மாலை கட்டுவதிலே, நெல், அரிசி, கிராம்பு போன்றவைகளைக்கொண்டு தஞ்சாவூரில் உயர்ந்த முறையில் மாலைகள் தயாரிக்கப்படுகின்றன. அங்கே இதற்காக ஒரு தனி தொழிற் சாலை வைத்து நடத்துவதற்குச் சர்க்கார் வசதிகள் செய்து கொடுக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: அதுபற்றியும் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

**Sri A. V. P. ASAITHAMBI**: கண்ணாடி வளையல்கள், மாலைகள் இவைகளை செய்கின்ற தொழில் நிலையங்கள் நமது ராஜ்யத்தில் எந்தெந்த மாவட்டங்களில் இருக்கின்றன ? புதியதாக ஏதாவது ஏற்படுத்துவது பற்றி உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: Training centre for the manufacture of glass bangles and beads at Madurai. Training-*cum*-service centre for the manufacture of glass bangles at Nedumarathy in Salem district. Training centre for scientific glass blowing in Guindy.

மேற்சொன்ன நிலையங்கள் இப்பொழுது இருக்கின்றன. மேற்கொண்டு இதை விஸ்தரிப்பது பற்றி கவனிக்கப்படும்.

**Sri A. A. RASHEED**: Sir, is the Hon. Minister aware that glass bangles are not popular with women? If so, will the Government stop giving training for the manufacture of glass bangles?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: Perhaps, that is the hon. Member's own experience. We have no information like that.

**Sri P. G. MANICKAM**: தொழில் நுட்பங்களையும் புது ரகங்கள் தயாரிக்கும் முறைகளையும் பயிற்சியாளர்களுக்கு கற்றுக்கொடுப்பதற்காக ஒரு நிலையம் ஆரம்பிக்கப்படுவதாகத் தெரிவிக்கிறுர்கள். அந்த நிலையம் எந்த இடத்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது ?